"இயற்கையாகவே அமைந்திருக்கும் சாத்தியமான சாத்தியக்கூறுகளை அடையாளம் கண்டு கொள்வோமாயின், நமது சமுதாயத்தின் அனைத்து அவலங்களும் நீங்கி,

புதியதொரு சமுதாயம் உருவாக நாம் அனைவருமே காரணமாகி விடுவோம்.

சாத்தியமானதை சிந்தித்து சாத்தியமானதைச் செய்வோமாயின் சாத்தியமற்றவைகளைக் கூட சாத்தியமாக்கி சாதித்துக் காட்டி விடலாம்.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சென்ற ஆகஸ்ட் மாதம் 27ஆம் தேதி முதல் 29ஆம் தேதி வரை 3 நாட்கள் Zoom meeting வாயிலாக சிறப்பாக நடைபெற்றது.

மேலும் நமது ஸ்ரீ பகவத் பவனில் பகவத் காட்டேஜ் கட்டிடப் பணி நிறைவடைந்து எல்லா வசதிகளுடன் அமைக்கப்பட்டு விட்டது. மேலும் வருடம் முழுவதும் மழை நீரை குடிநீராகவும் சமையலுக்காகவும் தூய்மையாகப் பயன்படுவதற்கு ஏற்றவகையில் அதிக கொள்ளளவு உள்ள டேங்க் அமைக்கும் பணியும் நிறைவடைந்து விட்டது.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

விரைவில் நமது ஸ்ரீபகவத் பவனில் நேரடியாக ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற உள்ளது. அதற்கான தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

பகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் சேர்க்கையில் இன்னும் இரண்டு இடங்கள் மட்டுமே இருக்கிறது. இதன் விபரம் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. வாய்ப்புள்ள அன்பர்கள் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் பிறந்த தினம் 12-09-2021 ஆகும். இந்த நாளை ஞானியர் தினமாகக் கொண்டாடுவதாக அறிவித்திருந்தோம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் ஞானம் பெற்றவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறோம். ஞானம் பெற்ற நாம் அனைவரும் ஒரு குடும்பமாகவே இணைந்துவிட்டோம்.

இந்த ஞானக் குடும்பத்துக்கு ஸ்ரீ பகவத் ஐயா தந்தையாக இருந்து வழிநடத்தி வருகின்றார். ஆகவே அவரது பிறந்த நாளை, நமது ஞானக் குடும்பத்தின் **தந்தையர் தினமாக** எடுத்துக் கொள்வதே பொருத்தமாக இருக்கும்.

அதேபோல் ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானம் ஆன்மிக உலகில் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கியுள்ளது. ஆகவே அவர் ஞானம் பெற்ற நாளான மார்ச் 13 ஆம் தேதியை **ஞானியர் தினமாக** கொண்டாடுவதே பொருத்தமாக இருக்கும்.

எனவே இந்த தந்தையர் தினத்தில் நாம் அனைவருமே நமது உலக சமூகத்தின் தாய் தந்தையராகப் பொறுப்பேற்று ஐயாவின் **புதிய உலகம் படைப்போம்** என்ற சமுதாய நல் மாற்றத்தை ஏற்படுத்தும் நூலை நாம் ஒவ்வொருவரும் சமுதாய அக்கறை கொண்ட நல்ல நண்பர்கள், சிந்தனையாளர்கள், உறவினர்கள் என அனைவருக்கும் வழங்கியும் ஐயாவின் ஞானக் கருத்துகளை பலரோடு பகிர்ந்தும் , புதிய உலகை வரவேற்போமாக.

நீங்கள் மற்றவர்களுக்கு வழங்குவதை ஒரு ஃபோட்டோ எடுத்து அதனை 9789165555 என்ற எண்ணுக்கு அனுப்புமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இதனை ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நாம் அனைவரும் தாமே முன்வந்து தமது கடமையாக செய்ய வேண்டுமென்று அன்புடன் வேண்டுகிறோம்.

நாம் அனைவரும் நமது ஒருமித்த செயலாக ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்தநாளான தந்தையர் தினத்தில்...

புதிய உலகம் படைப்போம்!

சமுதாயத்தின் நல்ல மாற்றதிற்கு நாம் ஒரு விதையாக இருப்போம்!!

வாருங்கள் ஒன்றினைவோம் வளமான சமுதாயத்தை உருவாக்குவோம்.

அன்புடன்
ஸ்ரீ பகவத் மிஷன்.



# புதிய உலகம் படைப்போம்



- ஸ்ரீ பகவத்

சட்டக் கல்லூரியில் முதலாவது வருடம் படித்துக் கொண்டிருந்த காலம்.

சென்னை நங்கநல்லூரில் தங்கியிருந்தேன். அந்தக் காலத்தில் அது கிராமம் மாதிரியே இருந்தது. ஓர் ஒற்றையடிப் பாதை வழியாகவே நான் இரயில் நிலையத்துக்குப் போக வேண்டும்.

அந்த வழியில் இரண்டு நபர்கள் உட்கார்ந்து வெட்டுச் சீட்டு என்னும் சூதாட்டத்தை ஆடிக் கொண்டிருந்தனர்.

மொத்தம் இரண்டு சீட்டுகள் மட்டுமே இருக்கும். அதில் X என்னும் சீட்டில் பணத்தைக் கட்ட வேண்டும்.

அந்தச் சீட்டைப் புரட்டிப் பார்க்கும்போது அது X ஆகவே இருந்தால் கட்டியவருக்கு இரண்டு மடங்கு பணம் கிடைக்கும். X ஆக இல்லாத பட்சத்தில் கட்டிய பணத்தை இழக்க வேண்டும்.

முதன் முறையாகப் பார்த்ததால் அது என்ன என்று பார்க்க வேண்டும் என்று தோன்றியது. அருகில் சென்று பார்த்தேன்.

ஒருவர் இரண்டு சீட்டுகளைக் கலைத்துப் அவற்றைக் கவிழ்த்துப் பரப்பினார்.

அந்த இரண்டில் ஏதாவது ஒன்று தான் X எனும் சீட்டு. அவர் அப்படிக் கவிழ்த்து வைக்கும்போதே எது X என்ற சீட்டு என்பதை வெகு சுலபமாகக் கண்டுபிடித்துவிடலாம்.

ஆனால் அவருடன் விளையாடிய நபர் தவறான சீட்டில் பணத்தைக் கட்டினார். அதனால் அவர் பணத்தை இழந்து விட்டார்.

மீண்டும் விளையாடினார். X என்ற சீட்டு எது என்பதை சுலபமாகக் கண்டுபிடிக்க முடிந்தது. ஆனாலும் விளையாடியவர் தவறான சீட்டில் பணத்தைக் கட்டி பணத்தை இழந்தார்.

ஆடிப் பார்க்கலாமோ என்ற எண்ணம் எனக்கும் தோன்றியது.

அடுத்தமுறை சீட்டைப் பரப்பினார். X என்பது எது என்பது தெளிவாகத் தெரிந்தது. அதன் மீது 50 பைசா கட்டினேன். (இக்காலத்தில் அது 50 ரூபாய் பெறும்).

நான் பணத்தைக் கட்டிய சீட்டைப் புரட்டினார். அது X இல்லை. பணத்தை இழந்து விட்டேன்.

உண்மையில் அந்த இருவருமே கூட்டாளிகள்தாம். நமது ஆசையைத் தூண்டும் வகையில் விளையாடி நம்மையும் விளையாட வைத்து விடுகிறார்கள்.

இது ஒரு தவறு சம்பந்தப்பட்ட உதாரணமாக இருந்தாலுங்கூட மனதினுடைய செயல்பாடு எப்படி அமைந்துள்ளது என்பதையும் இது காட்டுகிறது.

சரியான சீட்டில் பணத்தைக் கட்டுவதை விட்டு விட்டு தவறான சீட்டில் பணத்தைக் கட்டுகிறாரே என்ற ஆதங்கம் ஏற்பட்டுவிடுகிறது.

எங்களூரைச் சேர்ந்த இன்னுமொருவர் சட்டக் கல்லூரியில் படிக்கும்போது இப்படி வெட்டுச் சீட்டு விளையாடியவரையே திணற அடித்த கதை கூட உண்டு தேவைப்பட்டால் அதனைப் பிறகு பார்க்கலாம்.

நாம் ஆபத்து ஒன்றை எதிர்கொள்ளவேண்டிய கட்டாயத்தில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். நாம் நேருக்கு நேராகப் போராடியும் பார்க்கலாம் அல்லது வேறு ஏதாவது மாற்று வழியையும் கண்டு பிடிக்கலாம்.

"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்", என வள்ளலார் கூறியுள்ளார்.

அவர் வாடியது சரிதான்; ஆனால் பயிரைக் காப்பாற்ற என்ன செய்வது என்ற சிந்தனைக்கு அவர் வாய்ப்பளித்தாரா என்ற விபரம் தெரியவில்லை.

பிச்சை எடுத்து வாழ்ந்திடும் வறியவர்களுக்குப் பிச்சை இடுவது தான் தீர்வா?

நாம் வாழ்ந்து வரும் சமுதாயத்தின் அவலங்கள் ஒன்றா இரண்டா? எண்ணிப் பார்க்க முடியாத அவலங்களின் மத்தியில் நாம் வாழ்ந்து வருகிறோம்.

அந்த அவலங்களைப் பார்த்து நாம் வாடலாம்.

இதுதான் தீர்வா?

வாடுவது தான் தீர்வா?

எனது கையில் என்ன இருக்கிறது – இது எனது சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்று என,

நாம் நமது தனிப்பட்ட சொந்த வேலைகளுக்குத் திரும்பி விட வேண்டுமா?

ஒருவர் பசியும் பட்டினியுமாக இருந்து உணவுக்காகப் பிச்சை எடுக்கிறார்.

அதற்கு நானும் நீங்களுந்தான் காரணம் என்று அவர் நம்மீது குற்றம் சுமத்துகிறார் என்று வைத்துக்கொள்வோம்.

நாம் என்ன பதில் சொல்வோம்?

ஏதாவது பதிலைக் கண்டு பிடித்து தப்பித்துக் கொள்ள முயல்வோமா?

அல்லது அவர் சொல்வதில் உண்மை ஏதாவது உண்டா என்ற கேள்வியை ஆய்வுக்கு எடுத்துக் கொள்வோமா?

ஒருவருக்கு உணவு, உறைவிடம், உடை போன்றவைதான் அத்தியாவசிய தேவை.

ஆனால் இதன் பின்னணியில் எத்தனையோ விதமான செயல்பாடுகள்.

எவருடைய பணி எவருடனெல்லாம் இணைந்துள்ளது என்பதைக் கண்டுபிடிக்க முடியாத அளவில் மிகப்பெரிய வலையாக அமைந்துள்ளது.

வெட்டுச் சீட்டு விளையாட்டு சம்பந்தமான சம்பவம் ஒன்றைப் பார்த்தோம்.

அவரிடம் 50 பைசாவை இழந்து, இது நம்மை ஏமாற்றக் கூடிய ஒரு சூதாட்டம் எனப் புரிந்து அதிலிருந்து விலகிக் கொண்டேன்.

எனது ஊரைச் சேர்ந்த ஒருவரும் அத்தகைய ஒருவரை எதிர்கொண்டுள்ளார்.

அதை விளையாடியவர் எதிர்த்து விளையாடுபவர்களை ஏமாற்றும் வித்தையைப் பயன்படுத்தி சீட்டுகளை வைத்து ஏமாற்றி விட்டார்.

எனது ஊரைச் சேர்ந்தவர் தனது பாணியில் அவரை எதிர்கொண்டார்.

சரியான சீட்டு எது என்று கண்டு பிடிக்கும் ஆற்றல் அவருக்கு இல்லை. ஆனால் சீட்டுக் காரருக்குத் தெரியாத கணிதம் அவருக்குத் தெரிந்திருக்கிறது.

என்னைப் போலவே அவரும் முதலில் 50 பைசாவை வைத்து இழந்திருக்கிறார்.

ஆனால் என்னைப்போல் விளையாட்டை நிறுத்தவில்லை.

அடுத்த முறை அவர் பந்தயத் தொகையாக ஒரு ரூபாயை வைத்துள்ளார். அதையும் இழந்துவிட்டார். அடுத்தமுறை இரண்டு ரூபாயை பந்தயத் தொகையாக வைத்துள்ளார். அதையும் இழந்துவிட்டார்.

அடுத்த முறை நான்கு ரூபாயை பந்தயத் தொகையாக வைத்து விளையாடி எட்டு ரூபாய் அடைந்துவிட்டார்.

அடுத்த முறை அவர் மீண்டும் 50 பைசாவிலிருந்து ஆரம்பித்து விட்டார்.

சீட்டுக்காரன் அலறிவிட்டான்.

அவர் தனது சாமர்த்தியத்தால் சீட்டுக்காரனை அடக்கிவிட்டார்.

இதுவும் ஓர் அணுகுமுறை தான்.

ஆனால் அடுத்தவரை எப்படி ஜெயித்துக் காட்டுவது என்பதற்காக இந்த சம்பவத்தை நாம் பார்க்க முன்வரவில்லை.

நாம் பயன்படுத்த வேண்டிய ஆதங்க உணர்வைச் சுட்டிக்காட்டவே இந்தச் சம்பவம் கூறப்பட்டது.

கிராமத்துக் கொட்டகையில் கிராமத்தவர்களுடன் அமர்ந்து திரைப்படம் பார்த்த அனுபவம் எனக்கு உண்டு.

கதாநாயகன் அமர்ந்திருக்கிறான்

அவனுக்குத் தெரியாமல் அவனுக்குப் பின்புறமாக வில்லன் உருவிய கத்தியுடன் வருகிறான்.

”பின்பக்கம் திரும்பிப் பார்” என்று கிராமத்தவர்கள் சிலர் கூக்குரலிடுவது உண்டு.

இந்த நிலையில் சாத்தியச் சிந்தனை என்ற சிந்தனை ஒன்றை அறிமுகம் செய்து,

புதிய உலகம் படைப்போம் என்ற நூலில் விவரித்துள்ளோம்.

இயற்கையாகவே அமைந்திருக்கும் சாத்தியமான சாத்தியக்கூறுகளை அடையாளம் கண்டு கொள்வோமாயின், நமது சமுதாயத்தின் அனைத்து அவலங்களும் நீங்கி

புதியதொரு சமுதாயம் உருவாக நாம் அனைவருமே காரணமாகி விடுவோம்.

சாத்தியமானதைச் சிந்தித்து சாத்தியமானதைச் செய்வோமாயின்

சாத்திய மற்றவைகளைக் கூட சாத்தியமாக்கி,

சாதித்துக் காட்டி விடலாம்.

அதென்ன சிந்தனைகள்?

சீட்டு விளையாட்டு சட்டவிரோதமானது. சட்டரீதியான நடவடிக்கை மூலமாகவும் அவனைக் கட்டுப்படுத்தலாம். அல்லது எனது ஊரைச் சேர்ந்தவரைப் போல் அவனை அடக்கியும் காட்டலாம்.

அடுத்ததாக ?

தனது வறுமையைப் போக்கிக் கொள்ளவே அவன் அந்தப் பாதையைத் தேர்வு செய்துள்ளான்.

இல்லாமை மட்டுமே இங்குள்ள உண்மையான பிரச்சினை. அதைத் தீர்வு செய்வதுதான் உண்மையான தீர்வு.

அவற்றை நமது, ” **புதிய உலகம் படைப்போம்**” என்ற நூலில் தெளிவுற விவரித்துள்ளோம்.

புதிய உலகை உருவாக்குவதில்

நாம் அனைவருமே ஒன்றாக இணைவோமாக.



# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/– வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

1) Google pay - +918531036977

2) **Sri Bagavath Mission**
Hdfc Bank A/c No. - 15907620000075
NEFT IFSC - HDFC0001590

3) **Sri Bagavath Mission**
SBI Bank A/c No. - 31784345329
NEFT IFSC - SBIN0012772

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**





V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

## அறிவின் இயலாமையைப் புரிந்துகொள்ளவது எவ்வாறு?

**கேள்வி** : நான் ஞானம் அடைவதற்காக பல ஆன்மிக அமைப்புகளில் தொடர்ந்து முயன்று வருகிறேன். தற்போதுதான் ஸ்ரீ பகவத் ஐயாவைப் பற்றி தெரிந்து கொண்டேன். அவரின் நூல்களைப் படித்தும் யூட்யூப் வீடியோக்களை பார்த்தும் zoom meeting-ல் கலந்துகொண்டும் வருகிறேன். மிகப் பெரிய விஷயத்தை மிக எளிமையாகக் கூறியிருக்கிறார்.

ஆனாலும் அறிவின் இயலாமையை நமக்குள் எப்படி புரிந்து கொள்வது என்பது எனக்கு புரியவில்லை? சற்று விளக்கமாக கூறவும்.

**பதில்:** அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வதற்கு முன் நாம் முதலில் மனதின் இயக்கம் எப்படி செயல்படுகிறது என்பதை தெரிந்துகொள்ள வேண்டும்.

நாம் இரு வகையான இயக்கத்தை நம்முள் உணர்கிறோம். ஒன்று புலன் இயக்கம் மற்றொன்று மன இயக்கம் ஆகும்.

நமது புலன்களின் இயக்கம் என்பவை கண் வழியாகப் பார்த்தல், காது வழியாக கேட்டல், மூக்கின் வழியாக நுகர்தல், வாய் வழியாக சுவைத்தல், உடல் வழியாக உடல் உணர்வாக உணர்தல் என ஐந்து புலன்கள் செயல்படுகின்றன.

ஐந்து புலன்களும், தாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கு ஏற்ப ஏதோ ஓர் உணர்வை வெளிப்படுத்துகின்றன. எந்த புலனும் ஏதோ ஓர் உணர்வில் தொடர்ந்து தங்கி விடாமல் அடுத்த சூழ்நிலையைச் சந்திக்க தயாராகவே இருக்கிறது.

இப்படி புலன் வெளிப்படுத்தும் உணர்வு இயற்கையானது, சுதந்திரமானது. இதில் வேண்டியது, வேண்டாதது என்பவை எதுவும் கிடையாது. புலன் இயக்கம் இவ்வாறு செயல்படுவதால் நமக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை.

ஐந்து புலன்களின் இயக்கங்களைத் தொடர்ந்து மனதின் இயக்கம் ஆறாவது புலன் இயக்கமாகவே செயல்படுகிறது. ஐந்து புலன்கள் வெளிப்படுத்துவதை மனம் தன்னுள் பதிவு செய்கிறது. மனம் இதுவரை தான் சேகரித்துள்ள தகவல்களை நினைவு என்ற பகுதியில் வைத்திருக்கும் சிறப்பு அம்சம் உடையது. புலன் வெளிப்படுத்தும் உணர்வை கொண்டு தரம் பிரிக்கிறது. இது என்ன உணர்வு என்பதை மனம் வெளிப்படுத்துகிறது.

இப்படி புலன் உணர்வை மனம் தரம் பிரிப்பதில் நமக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. இதுவும் இயற்கையானது, சுதந்திரமானது. இதில் நல்லது கெட்டது என்ற எந்த பாகுபாடும் கிடையாது.

நமது புலன் இயக்கத்திலும் மன இயக்கத்திலும் நமக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. அவை சுதந்திரமாகவே செயல்படுகின்றன. வேண்டியவை, வேண்டாதவை என்ற பாகுபாடு எதுவும் கிடையாது.

நமது மன இயக்கம் சுதந்திரமாக எண்ண உணர்வுகளை வெளிப்படுத்திய பிறகுதான் அறிவின் இயக்கம் செயல்பட தொடங்குகிறது.

அறிவின் இயக்கத்தைதான் திரிபுக் காட்சி என்றும் 'நான்' எனும் அகங்காரத் தன்மை என்றும் கூறுகிறோம்.

நமது அறிவிற்கு, சுதந்திரமாக செயல்படும் புலன் இயக்கத்திலும் மன இயக்கத்திலும் எந்த ஒரு வேலையும் இல்லை.

மனம் வெளிப்படுத்தும் எண்ண

உணர்வுகளை அறிவு உணர்ந்துகொண்டுபுறத்தில் அதற்கான செயல் தேவையெனில் அதில் ஈடுபடலாம். அப்படி செயல் எதுவும் தேவை இல்லாத பட்சத்தில் அறிவு தனக்கு எந்த வேலை இல்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

புலன், மன இயக்கத்தில் தனக்கு எந்த வேலையும் இல்லை என்பதை அறிவு விளங்கிக் கொள்வதைத்தான் **ஞானம்** என்று குறிப்பிடுகிறோம்.

அறிவு தான் விரும்பியபடி புலன் மற்றும் மன இயக்கம் செயல்பட வேண்டும் என்று தான் பிடிக்கும் பிடிவாதமே அனைத்து போராட்டத்திற்கும் பிரச்சினைகளுக்கும் மூலகாரணம். இது முழுக்க முழுக்க அறிவின் அறியாமையே ஆகும்.

அறிவு தனக்குப் பிடித்த விஷயங்களைதான் புலன்கள் பார்க்க வேண்டும், கேட்க வேண்டும், சுவைக்க வேண்டும் ருசிக்க வேண்டும், ரசிக்க வேண்டும், தனக்கு பிடித்த நினைவுகளைதான் மனம் வெளிப்படுத்த வேண்டும் என்று பிடிக்கும் பிடிவாதமே நாம் சந்திக்கும் அனைத்துப் பிரச்சனைகளுக்கும் காரணம்.

நமது அறிவுக்கு பிடிக்கவில்லை என்பதற்காக புலன் இயக்கம், தான் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப உணர்வுகளை வெளிப்படுத்துவதை நிறுத்துவதில்லை. மனமும் அதேபோல் எண்ணங்களையும் உணர்வுகளையும் தரம் பிரித்து காட்டுவதையும் நிறுத்துவதில்லை. ஆனால் **அறிவு விரும்பியபடி மனம் செயல்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பதே நமது அனைத்து பிரச்சினைக்கும் காரணமாக அமைகிறது.** அறிவின் இயக்கம் தன்னுடைய இயலாமையைப் புரிந்து கொள்ளாமல் இருப்பதே இதற்கு காரணம்.

உதாரணமாக ஒட்டுமொத்த இயக்கத்தையும் ஒரு கணக்காக பார்ப்போம்.

புலன் இயக்கம் செயல்பட 45% சக்தியும் மனோ இயக்கம் செயல்பட 45% சக்தியும் அறிவின் இயக்கம் செயல்படுவதற்கு வெறும் 10% சக்தி மட்டுமே இருக்கிறது.

90% சக்தியுள்ள புலன் மன இயக்கங்களில்தேவையில்லாமல் அறிவு தனது ஆளுமையைச் செலுத்துவதே அனைத்து பிரச்சனைகளுக்கும் காரணம். தன்னால் இயற்கையான மன இயக்கங்களில் குறுக்கிட முடியாது என்ற தோல்வியை 10% சக்தியுள்ள அறிவுதான் உணர்ந்து கொள்ள வேண்டும்.

அறிவு தனது இயலாமையை உணர்ந்து கொண்டு, புலன் மன இயக்கங்களில் பிடித்திருந்த பிடியிலிருந்து விடுபடும்போது புலன், மன இயக்கம் சுதந்திரமாக செயல்படுகிறது. எந்த தங்கு தடையும் இல்லாமல் இயற்கையாக செயல்படுகிறது. இதுவே சுதந்திரமான மனோ இயக்கம் ஆகும். புறத்தில் தேவையான செயலுக்கு மட்டும் அறிவைப் பயன்படுத்திக்கொண்டு செயல் செய்து கொள்ளலாம்.

இப்படி அறிவுக்கு, புறத்தில் செயல் செய்வதற்கு மட்டும்தான் வாய்ப்பு உள்ளது. புறத்தில் செயல் செய்வதில்கூட எப்படி செயல் செய்யலாம் என்று பல திட்டங்களை தீட்டலாம், பலருடன் சேர்ந்து புதிய செயல் திட்டத்தை உருவாக்கலாம். ஆனால் விளைவு இப்படித்தான் வரவேண்டும் என்று கூறும் எந்த அதிகாரமும் அறிவுக்கு கிடையாது.

புறம் என்பது பலரோடு தொடர்புடையது. நாம் பலருடன் சேர்ந்து செயல்பட வேண்டியுள்ளது. அதனால் நாம் விரும்பியபடிதான் விளைவு வரும் என்று கூற முடியாது.

அறிவுக்கு செயலில் பங்குண்டு விளைவில் பங்கில்லை. விளைவு முழுவதையும் நாம் முழு மனதிடம் ஒப்படைத்துவிட்டு, செயல் செய்வதோடு அறிவு தன் வேலையை முடித்துக் கொள்ள வேண்டும்.

புலன் இயக்கம் சுதந்திரமானது. அதனைத் தொடர்ந்து ஏற்படும் மன இயக்கமும் சுதந்திரமானது. அறிவு தன் இயலாமையை புரிந்து கொள்ளும்போது, அறிவின் இயக்கமும் இதுவரை இருந்த வந்த அறியாமையிலிருந்து விடுபட்டு தனது தகுதி என்ன என்பதை உணர்ந்து கொள்கிறது. தேவையற்ற குறுக்கீடுகள், போராட்டங்களில் இருந்து விடுபடுகிறது. புறத்தில் தேவையான செயல் செய்வதோடு தன் பணியை முடித்துக்கொள்கிறது. இப்படித்தான் விளைவு இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் இருந்து விடுபட்டு விடுகிறது.

இப்படி செயல்படுவதைத் தான் பகவத் கீதையின் சாராம்சமான **விளைவில் பந்தமில்லாமல் கடமையை** செய்வதாகும்.

# ஜென் கதை

## அறிவற்ற கண்ணாடி





கல்வி கற்கும் இளைஞனொருவன் எதிர்மறை எண்ணங்களாலும் உணர்வுகளாலும் மிகவும் சிரமப்பட்டான். இளம் பெண்களை பார்க்கும்போது காம சிந்தனையால் அவதிப்பட்டான். இந்த சிந்தனைகளால் தன் படிப்பு கெட்டுப் போவதாக கருதினான். ஆதலால் அவற்றில் இருந்து விடுபடுவதற்காக பல முயற்சிகளை செய்தான்.

அவனுடைய முயற்சியால் காம சிந்தனை அதிகரித்ததே தவிர குறைந்தபாடில்லை. தனக்கான தீர்வைத் தேடி ஞானி ஒருவரை சந்தித்தான். தன் பிரச்சினைகளை எடுத்துக் கூறி தீர்வு கேட்டான்.

ஞானி, "உன் மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளை நீ பொருட்படுத்தத் தேவையில்லையப்பா. அவற்றை கண்டு கொள்ளாதே" என்றார்.

இளைஞன், "என் மனதில் தோன்றும் காம சிந்தனைகள், என்னை பாதிப்படையச் செய்கின்றன. எப்படி கண்டுகொள்ளாமல் விடுவது?" என்று கேட்டான்.

ஞானி, "உனக்குள் தோன்றும் காம சிந்தனைக்கு, நீ கர்த்தா அல்லவே. நீ ஒரு கருவிதான். எனவே நீ அவற்றை அப்புறப் படுத்துவதற்காக பொறுப்பெடுக்கவும் தேவையில்லை. கண்டு கொள்ளவும் தேவையில்லை. உன் காம உணர்வும் தோன்றி மறையும் ஒரு சாதாரண உணர்வே" என்றார்.

இளைஞன், "சுவாமி நீங்கள் கூறுவது எனக்கு புரியவில்லை. பொறுப்பெடுக்காமல் விடுவது என்றால் என்ன?" என்று கேட்டான்.

ஞானி, தன் அருகில் இருக்கும் மிகப் பெரிய கண்ணாடியைக் காண்பித்தார்.

"இந்த கண்ணாடி தன் எதிரே இருக்கும் காட்சியை தன்னில் பிரதிபலிக்கும் இயல்புடையது. அதுபோலத்தான் நம் மனது. நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப நம் இயல்பிலிருந்து எண்ண உணர்வுகள் வெளிப்படும். இது நமது கட்டுப்பாட்டில் இல்லை." என்றார்.

இளைஞன், "புரிகிறது சுவாமி, ஆனால் எனக்குள் ஏற்படும் எண்ணங்களும் உணர்வுகளும் எனக்குப் பிரச்சினையை ஏற்படுத்துகின்றதே என்ன செய்வது?" என்றான்.

"ஒரு கண்ணாடி தன்னில் தோன்றும் காட்சிகளை தக்க வைத்துக் கொள்ளவோ, அப்புறப் படுத்தவோ போராடுவதில்லை. ஆனால் உன் மனம் என்ற கண்ணாடி தன்னில் தோன்றும் காட்சிகளோடு போராடுகிறது. அதுதான் பிரச்சனை. போராட்டத்தை கைவிடு." என்றார் ஞானி.

இளைஞன், "சுவாமி, எனக்கு நல்ல உணர்வுகள், நல்ல எண்ணங்கள் வந்தால் பரவாயில்லை. மோசமான எண்ணங்களும் மோசமான உணர்வுகளும் வந்தால் என்ன செய்வது? அதனால் மோசமான செயல்களை நான் செய்து விட மாட்டேனா?" என்று கேட்டான்.

ஞானி, "நல்லது-கெட்டது என்று தரம் பிரிப்பதெல்லாம் அறிவின் வேலை. மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளில் நல்லது - கெட்டது என்று எதுவும் இல்லை. எல்லாம் பிரதிபலிப்பு காட்சிகளே. புறம் பலரோடு தொடர்பு உடையது. அதில் நல்ல செயல், கெட்ட செயல் உண்டு. அதை அறிவைக் கொண்டு செய்." என்றார்.

இளைஞன், "சுவாமி, இப்படி எல்லா விதமான எண்ணங்களும் உணர்வுகளும் மனதில் தோன்றினால் அது தூய்மையான மனமாக இருக்குமா?" என்று கேட்டான்.

ஞானி, "ஒரு கண்ணாடி தன் எதிரில் இருக்கும் எல்லா வகையான காட்சிகளையும் பிரதிபலிக்கும். மோசமானதையும் பிரதிபலிக்கும், நல்லதையும் பிரதிபலிக்கும். அழகானதையும் பிரதிபலிக்கும், அசிங்கத்தையும் பிரதிபலிக்கும். ஆனாலும் அது எப்போதும் தூய கண்ணாடியாகதான் இருக்கிறது. அதற்கு எந்த பாகுபாடும் கிடையாது. அதனால் தான் அது பரிசுத்தமான கண்ணாடியாக உள்ளது. அது அறிவற்ற கண்ணாடி, அதற்கு எந்த பிரச்சினையும் இல்லை." என்றார்.

இளைஞன், "சுவாமி, எனக்கு அறிவு இருக்கிறதே. என்ன செய்வது?" என்றான்.

ஞானி, "கண்ணாடிக்கு எந்த ஒரு செயலும் இல்லை. உனக்கு புறச் செயல்கள் உண்டு. அறிவின் தேவையே புறச் செயலுக்குத்தான். செயலில் நல்லது – கெட்டது உண்டு. தேவையான செயல், தேவையற்ற செயல் என உண்டு. அறிவுக்கு அகத்தில் வேலையில்லை. புறத்தில்தான் வேலை. **அறிவு போராடாத எண்ணங்களும் உணர்வுகளும் என்றும் தூய்மையானதே.** அதனால் எந்தப் பிரச்சினையும் இல்லை. எனவே **அகத்தில் அறிவற்ற கண்ணாடியாக இரு**" என்றார்.

**அறிவற்ற கண்ணாடி** என்ற வார்த்தை அவனுக்குள் புரிதலை ஏற்படுத்தியது.

நன்கு புரிந்து கொண்டு நன்றி தெரிவித்தான். விடுதலையோடு விடைபெற்றான் இளைஞன்.

# ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்

## (இரண்டு உறுப்பினர்கள் மட்டுமே)




அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாததால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு நிறைவடைந்துள்ளது.

ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா 25-2-2021 வியாழக்கிழமை அன்று காலை 11 மணிக்கு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

இத் திறப்பு விழா ஒரு குடும்ப நிகழ்ச்சியில் எப்படி இருக்குமோ அப்படி அனைத்து உறுப்பினர்களுடன் சிறப்பாக கொண்டாடப்பட்டது.

அனைத்து ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்களையும் ஸ்ரீ பகவத் மிஷன் கௌரவித்து சிறப்பித்தது.

இதுவரை 8 பெரிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்ததைத் தொடர்ந்து 6 சிறிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள்.

இன்னும் இரண்டு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளனர்.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினர்களில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

**இன்னும் 2 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாகத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்...**

**அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்.**

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

Cell : 99942 05880, 97891 65555.

# ஞானியர் தினத்தில் (12–09–2021) – புதிய உலகம் படைப்போம்

தீவிரமான ஆன்மிகப் பயிற்சி முயற்சியில் ஈடுபடுபவர்களில் கோடியில் ஒருவர் ஞானம் பெறுவதே அரிது என்ற நிலையை மாற்றியவர்.

ஞானம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள திறந்த மனமும் ஆர்வமும் மட்டுமே அடிப்படையான தகுதி என்பதை எடுத்துரைப்பவர்.

ஞானம் அடைவது என்பது மனித குலத்தின் பிறப்புரிமை என்ற நிலைமைக்கு உயர்த்தியவர்.

பலகாலமாக அடைவதற்கு சிரமமாக இருந்த ஞானத்தை பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கியவர்.

பல ஞானிகளை உருவாக்கிய மகாஞானிதான் நமது **ஸ்ரீபகவத் ஐயா** அவர்கள்.

ஸ்ரீ பகவத் மிஷன், ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்தநாளை **ஞானியர் தினமாக** கொண்டாடி வருகிறது.

ஸ்ரீ பகவத் அய்யாவின் அணுகுமுறையால் நாம் இதுவரை மனதில் சுமந்து கொண்டிருந்த மன பிரச்சனைகளிலிருந்து விடுதலை பெற்றோம்.

"ஆன்மிகத்தை முடித்துக்கொண்டு அன்றாட அலுவல்களை பாருங்கள்" என்று கூறி நமது நெடுநாள் தேடல்களை முடிவுக்கு கொண்டு வந்தார்.

அகத் தேடுதலை முடித்துக்கொண்டு புறத்தில் மனித குலத்திற்கு தேவையானவற்றை எப்படி நமது புறச்செயலால் சிறப்பாக புதிய உலகத்தை ஏற்படுத்துவது என்ற புதிய அணுகு முறையையும் உருவாக்கிக் கொடுத்துள்ளார்.

மனிதகுலம் ஒட்டுமொத்தமாக எதிர்கொண்டிருக்கும் போரில்லா நல்லுலகம், இராணுவத்தை நாட்டின் வளர்ச்சிக்கு எப்படி பயன்படுத்துவது என்ற புதிய அணுகுமுறைகளையும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான ஒரு இராணுவ அமைப்பை உருவாக்குவது போன்ற அரிய எதிர்கால சிந்தனையை ஸ்ரீபகவத் அய்யா அவர்களால் உருவாக்கப்பட்ட நூல்தான் புதிய உலகம் படைப்போம் என்ற நூல் ஆகும்

**"எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும், இங்கு இல்லாமை இல்லாத நிலை வேண்டும்"** என்ற அடிப்படையில் சமுதாய நலனில் இதுவரை யாருமே சிந்தித்திராத புதிய கோணத்தில் **புதிய உலகம் படைப்போம்** என்ற நூல் அய்யாவின் கருத்துக்களைத் தாங்கி வெளியே வந்திருக்கிறது.

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நாம், மன இயக்கத்தை புரிந்து கொண்ட பிறகு புறத்தில் தான் செயல்பட வேண்டும் என்ற மாபெரும் உண்மையை விளங்கிக் கொண்டோம்.

அந்த வகையில் புரிந்துகொண்ட நமக்குதான் சமுதாயத்தை மாற்றம் செய்ய வேண்டிய முக்கிய கடமை உண்டு.

இந்த சாத்திய சிந்தனையை, நல்ல சமுதாய மாற்றத்துக்கு தேவையான கருத்தை அனைவருக்கும் தெரிவிக்க வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும்?

புரிந்துகொண்ட நாம் அனைவருமே ஸ்ரீபகவத் அய்யாவின் பிறந்த நாளான **ஞானியர் தினத்தில்** ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா **10 பிரதிகள் "புதிய உலகம் படைப்போம்"** என்ற நூலை வாங்கி சமுதாய நலனில் அக்கறை கொண்ட நமது நல்ல அன்பர்கள், நண்பர்கள், சிந்தனையாளர்கள், செயல்வீரர்கள், ஆட்சியாளர்கள் போன்றவர்களுக்கு இந்த நூலை கொடுத்து இதன் கருத்து சாராம்சத்தை தெரிவிப்போம்.

ஸ்ரீபகவத் அய்யாவின் கருத்துக்களைப் புரிந்து கொண்ட நபர்கள் ஒவ்வொருவரும் தாமே முன்வந்து இந்தப் பணியில் தங்களை இணைத்துக் கொண்டு உலகம் முழுவதும் இந்த அரிய உண்மை சென்றடைய நீங்கள் அனைவரும் செயல்பட வேண்டும் என்பதே ஸ்ரீ பகவத்மிஷனின் நோக்கம்.

இந்த **புதிய உலகம் படைப்போம்** என்ற நூல் அச்சிட ரூபாய் 20 செலவாகிறது. பலருக்கும் கொண்டு சேர்க்கும் நோக்கத்தில் ரூபாய் பத்துக்கு ஸ்ரீபகவத்மிஷன் வழங்கி வருகிறது.

மன இயக்கத்தை புரிந்து கொண்ட நாம் ஒவ்வொருவரும் தலா 10 பிரதிகள் அச்சிட செலவாகும் ரூ.20x10 புத்தகம் + 50 கொரியர் சார்ஜ் உட்பட மொத்தம் ரூ.250-யை செலுத்தி பெற்றுக்கொண்டு தங்களது நல்ல நண்பர்கள், அன்பர்கள், சிந்தனையாளர்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டுகிறோம்.

நீங்கள் இருபது ரூபாய் கொடுத்து வாங்கும் பொழுது, அடுத்த ஒரு பிரதி சமுதாய அக்கறை கொண்ட ஒருவருக்கு சென்றடைவதற்கு உதவுகிறீர்கள் என்ற கருத்தின் அடிப்படையில் ஒவ்வொருவரும் 10 பிரதிகள் + கொரியர் செலவு உட்பட ரூபாய் 250 செலுத்தி பெற்றுக்கொண்டு பகவத் ஐயாவின் பிறந்த தினத்தில் நீங்களே வெளியீட்டு விழாவாக கொண்டாடி நல்ல நண்பர்கள், அன்பர்களுக்கு தெரிவித்தால் அதுவே போதுமானது.

நமது ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் எடுக்கும் இந்த முயற்சி சமுதாயத்தில் ஒரு மிகப்பெரிய மாற்றத்தை உருவாக்கும்.

இந்த நூலை அனைவருக்கும் கொண்டு சேர்ப்பதில் ஆர்வம் காட்டியதோடு அதற்கான பெரும் முயற்சி எடுத்து செயல்படுத்தி நமக்கு ஊக்கமளித்த திண்டுக்கல், **வாழ்க வளமுடன், திரு. ஜெயகோபால் ஐயா அவர்களுக்கு** உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

புரிந்து கொண்ட நமது அன்பர்கள் ஒவ்வொருவரும் தாமாகவே முன்வந்து சமுதாயத்தில் முக்கியமான நபர்கள், நண்பர்கள், அன்பர்களுக்கு இந்தப் புத்தகத்தை வழங்கி அவர்களுடன் இணைந்து ஒரு புகைப்படத்தை எடுத்து நமது பிரவாகம் வாட்ஸ்அப் குரூப்களில் பதிவிடும்படி அன்போடு அனைவரையும் கேட்டுக்கொள்கிறோம்.

நாம் ஒவொருவரும் இந்த பத்துப் புத்தகங்களை வெளியிடுவதை ஒரு வெளியீட்டு விழாவாக ஞானியர் தினத்தில் செயல்படுத்துவோம். அதுவே நமது பகவத் மிஷன் நோக்கம்.

31.8.2021க்குள் பணம் அனுப்பி 12.9.2021 அன்று புத்தகத்தை வெளியிட தயாராக வேண்டுகிறோம். எவ்வளவு புத்தகங்கள் வேண்டுமானாலும் பெறலாம்.

ஸ்ரீ பகவத்மிஷன் Account HDFC Bank & SBI Bank இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**

| | | |
|---|---|---|
| Hdfc Bank A/c No. | : | 15907620000075 |
| NEFT IFSC | : | HDFC0001590 |

**Sri Bagavath Mission**

| | | |
|---|---|---|
| SBI Bank A/C No. | : | 31784345329 |
| IFSC Code | : | SBIN0012772 |
| **Google pay** | : | 8531036977 |

உங்களது சமுதாய அக்கறையை உறுதி செய்ய வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத்மிஷன். சேலம்.**

**9789165555, 9994205880**

**சேலம் ஸ்ரீபகவத் மிஷனும்**

**திண்டுக்கல் வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையமும்**

இணைந்து நடத்தும்

## "புதிய உலகம் படைப்போம்"

**புத்தக வெளியீட்டு விழா**

நாள் : **12–09–2021** நேரம் : **காலை 11.00 மணி**

இடம் : **வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையம்,**
3, வாழ்க வளமுடன் தெரு, திண்டுக்கல். செல் : **91 50 30 29 04**

**உலகம் சமநிலை பெறவே, உயர்வு–தாழ்விலா நிலை வேண்டும்.**



# நிகழ்ச்சி நிழல்கள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555





















